தம்பதிகளின் லட்சியம்: தன் பிள்ளை பிராமண தர்மத்தின் பிரதிநிதியா ஆகணும்கறது. இந்தக் காலத்திலே எவன் இருக்கான்? நான் ஏன் எவனையோ தேடணும்? அப்படிப் பட்டவாளுக்குப் பொறந்த நானிருந்தேனே அவா மாதிரி?

"நான் எவ்வளவோ சொன்னேன: அந்த செருப்புக் கடை வேலை வாண்டாமனு, இந்த மணி கேட்டானா?... 'உனக்கு ஒண்ணும தெரியாது. இதுக்கே நான் என்ன சிரமப்பட்டிருக்கேன்.. மாசம் இருநூத்தைம்பது ரூபா சம்பளம். வருஷத்திலே மூணு மாச போனஸ் இந்த வேலைக்கு என்ன குறைச்சல்! அங்கே ஒண்ணும் மாட்டை அறுத்து, தோல் எடுத்துச் செருப்புத் தைக்கிற வேலை இல்லே டப்பாவிலே வர்ற செருப்பை எடுத்து விக்கறதுதான். உனக்கு ஒன்றும தெரியாது, நீ ஒரு பஞ்சாங்கம்...சும்மா இருன்னு என் வாயை அடைச்சுட்டுப் போயிட்டான் அந்த வேலைக்கு.

"அது அவன் தப்பா? இல்லே, அது ஒரு தப்பான்னு யோசிச்சுப் பார்த்தா இந்தக் கலியிலே எல்லாம் சரிதான்னு தோண்றது ஏன்னா, என் பிள்ளைகள் என்னைப போல குடுமி வச்சுண்டு, உடம்பிலே சட்டை போடாம, காலிலே செருப்பும் போட உரிமை இல்லாம—இந்தக் காலம் பார்த்துப் பரிகசிக்கிற ஒரு ஒதுக்கப்பட்ட கூட்டமா வாழணும்னு நான் ஆசைப்படலே. அதனாலேதான் அவாளை இங்கிலீஷ் படிக்கவைச்சேன். கிராப்பு வச்சுக்கச் சொன்னேன். இதுக்கு அர்த்தம் என்ன? நான் எப்படி இருக்கணும்னு ஆசைப் பட்டு அப்படி இருக்க முடியலையோ அப்படியெல்லாம் அவாளை ஆக்கித் திருப்திப்பட்டுண்டேனா? ஆமாம்; 'ஒதுங்கிப்போ ஒதுங்கிப் போ'ன்னு சொல்லிச் சொல்லி நானேதான் ஒதுங்கிப் போயிட்டேனே!... ஒரு ஜாதி தாழ்ந்தது எவ்வளவு பொய்யோ அவ்வளவு பொய் இன்னொரு ஜாதி உயர்ந்ததும். இது எப்போ தெரியறதுன்னா தாழ்த்தி ஒதுக்கப்பட்ட ஜாதியைப போலவே உயர்ந்து ஒதுங்கிப் போன ஜாதியும் படற கஷ்டத்திலே எனக்குத் தெரியறது. என் பிள்ளைகள் பேருக்கு உயர்ந்த ஜாதின்னு சொல்லிண்டாலும், ஊருக்குப் பூணூல போட்டுண்டாலும நல்ல வேளை '—என்னைப்போல ஒதுங்கிப்போன ஜாதி ஆயிடலே. ஆனா அவா கூட என்னை ஒதுக்கி வச்சுட்டாளே. என்னை அப்பான்னு சொல்லிக்க, அவா சமமா பழகறவா மத்தியிலே என்னை அப்பான்னு காட்டிக்க எவ்வளவு வெக்கப்பட்டாங்கறதை நான் எத்தனையோ தடவை பார்த்திருக்கேன்

"ம்...முகம் தெரியாத அப்பாவை நெனச்சு நெனச்சு நான் பெருமைப் பட்டுண்டிருக்கேன்...கண்ணெதிரே இருக்கிற அப்பனைப் பார்த்து என் பிள்ளைகள் வெக்கப்பட்டுண்டிருக்கு! அது சரி, நானே என்னை நெனைச்சு வெக்கப்படறச்சே, அவா படறது தப்பா?"

—மீண்டும் இந்த இடத்திலிருந்து பென்சில் எழுத்துக்கள் ஆரம்பமாகின்றன. சிவராமனின் கண்களில் சுரந்த கண்ணீரால் அந்த எழுத்துக்களும் மறைகின்றன அவன் சில விநாடிகள் மேல் துண்டால முகத்தை மூடிக் கொள்கிறான். அழுகிறானா? பிறகு ஒரு முறை பெருமூச்செறிந்து சிவந்த கண்களும் துடிக்கின்ற உதடுகளுமாய்த் தொடர்ந்து படிக்கிறான்:

"பாரதியார் ரொம்ப கோபத்தோடு கடுமையாய்த்தான் சொல்லியிருக்கார்: 'அர்த்தம் தெரியாம மந்திரம் சொலறதைவிட செரைக்கப் போகலாம்'னு ஒரு பத்து வருஷத்துக்கு முன்னே இதை எங்கேயோ படிச்சேன் நான் சொல்ற மந்திரத்துக்கெல்லாம் எனக்கு அர்த்தம் தெரியுமா?ன்னு நான் யோசிச்சுப் பார்த்தேன். அன்னிக்குப் பூரா முகந் தெரியாத என் தகப்பனாரை—அந்த மகா பண்டிதரை நெனச்சு, நெனச்சு, நான் அழுதேன் அந்த மகா பண்டிதரிடம்—என் தகப்பனாரிடம்—படிச்ச சுந்தர கனபாடிகளும் மகா பண்டிதர்தான். அவரிடம் படிச்சவன் நான் ஆனா எனக்கு அவர்கிட்டே ஆசான் என்கிற பக்தியைவிட 'அடிப்பாரே' என்கிற பயம்தான் அதிகமாக இருந்தது ஒரு தடவைக்கு மேலே கேட்டா அவருக்குப் பொல்லாத கோபம் வரும். அந்தப் பயத்திலே அவர் ஒரு தடவை சொல்றதைக்கூட நான் ஒழுங்காப் புரிஞ்சுக்கலலே. நான் கிளிப்பிள்ளை மாதிரி வேதம் படிச்சேன் அப்போ அது எனக்கு தப்புன்னு தோணலே...

"...மந்திரங்கள் தெய்வீகமான, புனிதமான, பவித்திரமான விஷயங்களைப்பத்திப் பேசறதுங்கற நம்பிக்கையிலேயே அதை நான் மனனம் பண்ணிட்டேன் 'தாய்ப்பால்லே என்னென்ன வைட்டமின் இருக்குன்னு தெரிஞ்சுண்டா குழந்தை குடிக்கிறது! ஆனாலும் அது அவசியமில்லையா? நோயாளிக்கு மருந்துதான் முக்கியமே ஒழிய, ஒவ்வொரு மாத்திரையிலேயும் என்னென்ன ரசாயனம் கலந்து இருக்குங்கிற ஞானம் அவசியமா என்ன? அதுபோலதான் மந்திரம்! உனக்கு அது தேவை; அதை ஜபிப்பதன் மூலம் அதற்குரிய பலன்கள் வந்து உன்னை அடையும்'னு ஒரு பெரிய மேதை எழுதியிருந்தார். அதைப் படிச்சப்பறம்தான் எனக்கு ஒரு ஆறுதல் பிறந்தது. ஆனா, அந்த ஞானியின் இந்த வாதமும் எனக்குத் தக்க சமயத்தில் கை கொடுக்கல்லே...

" ஒரு தடவை வக்கீல் ராகவைய்யர் ஆத்துக்கு தர்ப்பணம் பண்ணி வைக்கப் போயிருந்தேன். அவர் ரொம்பப் பெரியவர். என் தகப்பனர் மேலே வச்சிருந்த பக்தியை தகுதி இல்லாத என்பேர்லே அப்படியே வச்சிருந்தார். நாற்பது வருஷமா என்னே அவருக்குத் தெரியும். போன வருஷம் ஒரு நாள் அவர் வீட்டுக்குப் போயிருக் கச்சே, அவர் மருமான், வைத்தியநாத அய்யர்னு டில்லியிலேருந்து வந்திருந்தார் அவருக்கும் அன்னிக்கி தர்ப்பணம் பண்ணி வைக்க வேண்டியிருந்தது. அவரைப் பார்த்தா ஆள் வெள்ளேக்காரன் மாதிரி இருந்தார் அந்தப் பட்டுவஸ்திரத்தை அவர் கட்டியிருந்த முறையிலேயே மனுஷன் வேஷ்டி கட்டிப் பழகாதவர்னு தெரிஞ் சுண்டேன். நாலு அங்குலத்துக்குச் சரிகைக் கரை வேஷ்டியும் பட்டுத் துண்டுமா அவர் மாடியிலேருந்து எறங்கி வர்ரச்சே பள பளான்னு கால்லே சிலிப்பர் வேறே...என்ன பண்றது ? .. காலம் !

" ..நான் முகத்தைச் சுளிச்சுண்டு 'தர்ப்பணம் பண்ணச்சே அதைக் கழட்டிடணும்'னு சொன்னேன் 'ஐ ஆம் ஸாரி'ன்னு ஞாபக மறதிக்கு அவரும் வெக்கப்பட்டுண்டார். நானும் 'இட் இஸ் ஆல் ரைட்' சொன்னேன் ..நாலும் அடிக்கடி ஏதாவது ரெண்டு இங்கிலீஷ் வார்த்தையைக் கலந்து பேசறதுதான் ! ..உலகம் என்னே ஒதுக்கி வச்சிருந்தாலும் ஓடி ஓடி வந்து ஒட்டிக்கிற குணம் அது.

" எனக்கும் அன்னிக்கி பல எடத்துக்குப் போக வேண்டியிருந்தது. அவசர அவசரமா கடமையை முடிச்சுண்டு எழுந்திருக்கச்சே பார்த் தா தட்சணே குறைவா இருந்தது 'இந்த மனுஷனுக்கு ஒண்ணுமே தெரியலேயே'ங்கற அலட்சியத்தோட, "என்ன ஸ்வாமி தட்சணே குறையறதே"ன்னேன். அவர் என்னேப் பார்த்துச் சிரிச்சுண்டே "மந்திரமும் குறைஞ்சிருந்ததே"ன்னுர்...அன்னிக்கு மாதிரி வாழ்க்கை யிலே அதுக்கு முன்னே நான் இப்படி அவமானப்பட்டதில்லே. அப்புறமானு தெரிஞ்சது அவர் டில்லியிலே பெரிய சம்ஸ்கிருத புரொபஸர்னு...

" அவர் என்னைக் கேட்டார். "உங்க பீடத்துக்கு நாங்க வெச் சிருக்கற மதிப்பை நீங்க காக்க வேண்டாமா ? அர்த்தம் தெரியாமே மந்திரம் சொல்லித் தரலாமா?"ன்னு...நான் சொன்னேன் : " மருந் தைச் சாப்பிட்டா போறும், பலன் கிடைக்கும் ; மருந்திலே என்ன இருக்குன்னு தெரிஞ்சா என்ன, தெரியாட்டா என்ன?"ன்னு எப்ப வோ படிச்சதை எடுத்துவிட்டேன். அவர் என்னைப் பார்த்துச் சிரிச் சுண்டே " மருந்து சாப்பிடறவனுக்குத் தெரியாட்டா பாதகமில்லே. மருந்து கொடுக்கிறவருக்குத் தெரிஞ்சிருக்கணுமே ?"ன்னுர்...ஒரு

நிமிஷம் யோசித்துப் பார்த்தேன்...! என்ன சொல்றதுன்னு புரி யல்லே... "மன்னிச்சுக்கோங்கோ ஸ்வாமி"ன்னு கை எடுத்து கும்பிட்டுட்டு சைக்கிள்லே ஏறி ஓடி வந்துட்டேன்."

—மணி எட்டு அடிக்கிறது. ராஜம் அடுக்களையிலிருந்து அறைக்குள் வந்து அவன் முதுகில் உரசியவாறு நின்று அவன் தோள் வழியே அவன் படிக்கும் காகிதங்களைப் பார்க்கிறாள்; ஏதோ ஆபீஸ் விவகாரம என்ற அலட்சியத்தோடு,

"இன்னும் முடியலையா? சாப்பிட வரேளா?" என்ற குரல் கேட்டு அவன் கவனம் கலைந்து அவளைப் பார்க்கிறான்

"மணியும் வந்துடட்டுமே" என்று ஒரு பயந்த புன்னகையோடு அவன் வேண்டிக்கொள்கிறான்

"இந்தக் குப்பைகளையெல்லாம் ஆபீசோட வச்சுக்கப்படாதோ?" என்று சிடுசிடுத்தவாறு மேஜைமீதுகிடந்த ஒரு வாரப் பத்திரிகையை எடுத்துப் பிரித்துக்கொண்டு சுவரோரமாக உட்காருகிறாள் ராஜம்.

அவன் அடுத்த காகிதத்தைப் புரட்டுகிறான்.

"அறுபது வருஷமா அர்த்தமில்லாமல் பேத்திண்டே வாழ்ந்திருக் கேன்! என்னைபபோல மனுஷாளாலேதான பிராம்மண தர்மமே அவமானப் பட்டுடுத்து. ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு வேளையும் சந்தியாவந்தனம் பண்றச்சேயெல்லாம் ஏதோ குத்தம் செய்யறமாதிரி ஒரு உறுத்தல் பொய்யாவே வாழ்ந்துட்டமாதிரி ஒரு புகைச்சல்... சாஸ்திரங்கள், வேதங்கள் எல்லாம் இந்தக் காலத்திலேலே மதிப் பிழந்து போயிடுத்துன்னு நான் சொல்லமாட்டேன் அதுக்கு உரிய மதிப்பை, மரியாதையை நாமே உணர்ந்துக்கலேங்கறதுதான் எனக்குத் தெரியற உண்மை. இந்த ஒரு மாசமாத்தான் நானே ஒரு மனுஷன்னு எனக்குத் தெரியறது. இதுக்கு முன்னே நாடகத்திலே வர்ரமாதிரி நான் வேஷம் போட்டுண்டு, யாரோ எழுதிக் கொடுத்த வசனங்களைப் பேசறமாதிரி மந்திரங்களை, மனசிலே ஒட்டாம உதட் டிலே ஒட்டிண்டு திரிஞ்சேன்.

"...எனக்குத் தெரிஞ்சவா இப்ப யாராவது என்னைப் பார்த்தா அவாளுக்குத் தெரிஞ்ச கணபதிசாஸ்திரி நான்தான்னு சொன்னால் கூட, நம்பவேமாட்டா. எங்கேயாவது கண்ணாடியிலே என் உருவம் திடீர்னு தெரியறப்போ எனக்கே என்னை நம்ப முடியலே. ஆமாம்; என் மனசிலே இருக்கிற என் உருவம் குடுமி வச்சுண்டிருக்கு; பத்தாறு தரிச்சிண்டிருக்கு...அறுபது வருஷ நெனைப்பு அவ்வளவு சீக்கிரம் மாறிடுமா? ம்...நினைப்புத்தான்...

"இப்ப நான் பிராமணனும் இல்லே, சாஸ்திரியும் இல்லே எனக்கு, என் மனசாட்சிக்குத் துரோகம் செஞ்சுக்காத ஒரு நேர்மையான மனுஷன் நான்! நான் பொறந்த குலத்தை நான் ரொம்பவும் மதிக்கிறேன். ரொம்பப் பெரியவாள் செய்ய வேண்டிய காரியத்தை எல்லாம் போஷித்தனமா நான் செஞ்சுண்டு இருக்கறது, அவாளை நான் மதிக்கிறது ஆகாது. எல்லாரும் என்னைக் 'கிறுக்கு'ன்னுதான சொல்லுவா இப்பவும். சொல்லட்டுமே... அன்னிக்கி, குளத்தங்கரையிலேருந்து வந்த கோலத்தைப் பார்த்தவா எனக்குப் பயித்தியம் பிடிச்சுடுத்துன்னுதான் நெனச்சுண்டு இருப்பா. சுந்தர கனபாடிகள் மாதிரி இருக்கிறவாளுக்கு புரோகிதம் கௌரவமான ஜீவிதம்தான். அவர் என்னை என்னதான் வைதிருந்தாலும், அவரை நினைச்சு நான நமஸ்காரம் பண்றேன என் கண்ணைத திறந்துவிட்ட குரு அவர்தான். இந்த உலகமே அவர் ரூபத்திலே வந்து என்னைப் பிடிச்சுண்டு 'நீ பிராமணனா சொல்லு, இந்த மந்திரத்திற்கு அர்த்தம் தெரியாதவன்... நீ பிராமணனா சொல்லு'ன்னு உலுக்கின மாதிரி இருந்தது ... அவர்தான் எனக்கு பிரம்மோபதேசம் செஞ்சு வச்சு பூணூல் போட்டவர் ... அவர் சொல்லிக் கொடுத்ததைத்தான நான இத்தனை காலமா சொல்லிண்டு இருந்தேன் அது தப்புன்னு அவரே சொல்லிட்டார் எப்படிப் பார்த்தாலும் அவர்தான் என் குருநாதர் அவரை நான் நமஸ்காரம பண்றேன

"இப்போ நான் கிராப்பு வச்சுண்டுட்டேன். சட்டை போட்டுண்டேன், செருப்பு போட்டுண்டேன இதெல்லாம நன்னாத்தான் இருக்கு. எனக்கு நெனச்சுப் பார்த்தா சிரிப்பு சிரிப்பா வரது: சாஸ்திரிகள்னா செருப்புப் போட்டுக்கப்படாதாமே... ஆனா சைக்கிள்லே மட்டும் போலாமாம். எனக்கு சைக்கிள் — நாற்பது ரூபாய்க்கு சிவராமன்தான் வாங்கித் தந்தான் வாங்கறபோதே அது கிழம... இபப யாரு அதை உபயோகப படுத்திண்டிருப்பா? சிவராமனா? மணியா?... கிழங்களும் உபயோகப்படுமே, சாகற வரைக்கும்"

படித்துக் கொண்டிருந்த சிவராமன் தலைநிமிர்ந்து கூடத்துச் சுவரோரமாக நிறுத்தி இருந்த சைக்கிளைப் பார்க்கிறான். அவன் முகத்தைப் பார்த்து அவன பார்வை வழியே முகம் திரும்பி, கூடத்தில் நிறுத்தி இருந்த கணபதி சாஸ்திரிகளின் சைக்கிளை ராஜமும் பார்க்கிறாள். அந்த நிமிஷம் வார்த்தைகள் ஏதுமற்ற மௌனத்திலேயே, அவர்கள் இருவரும் ஒரே விஷயத்தைப்பற்றிப் பேசாமலேயே மன உறுத்தலைப் பரஸ்பரம் பரிமாறி உணர்ந்து கொள்கின்றனர்;

திடீரென ஒரு விம்மலுடன் ராஜம் அந்த மௌனத்தைக் கலைக்கிறாள் :

"இந்தப் பாழும் பிராம்மணர் எங்கே போய்த் தொலைஞ்சாரோ? ஒரு சேதியும் தெரியல்லையே...நாள் ஆக ஆக, என் மனசைப் போட்டு என்னென்னமோ செய்யறதே!... உங்ககிட்டே இப்ப மனசை விட்டுச் சொல்றேனே. அவர் இல்லாம எனக்கு இந்த வீடே வெறிச்சுனு இருக்கு; நீங்க ஏதாவது சண்டை போட்டேளா? இப்படி ரெண்டு பிள்ளைகள் மலையாட்டமா இருந்தும், இப்படி அனாதையாய்ப் போகணும்னு அவர் தலையிலே எழுத்தா?" என்று கையிலிருந்த வாரப் பத்திரிகையால் முகத்தை மூடிக்கொண்டு அழுகிறாள் ராஜம்.

'ஒன்றுமே தெரியாத அசடு' என்று தான் தீர்மானித்திருந்த தன் தந்தையின் உள்ளுணர்வுகளை அறிந்து, பிரமித்ததுபோலவே, அவர் மீது வெறுப்பைத் தவிர வேறு பாசமேதும் இல்லாதவள் என்று இது நாள் வரை தான் எண்ணியிருந்த ராஜத்தின் மன உணர்வுகளைத் திடீரென அறிய நேர்ந்ததும் எல்லா விஷயங்களிலும் ஏதோ ஒரு மகத்துவம் நமக்குத் தெரியாமல் ஒளிந்திருக்கிறது என்ற உணர்வில் மெய்சிலிர்க்கிறான் சிவராமன். மேஜை மீதிருந்த காகிதக் கத்தையில் தான் படித்திருந்த பக்கங்களை எடுத்து மௌனமாய் அவளிடம் நீட்டுகிறான்.

அப்போது அவன் விழிகளில் தைரியமான இரண்டு சொட்டுக் கண்ணீர் துளித்திருந்து பொட்டென உதிர்கிறது!

"என்ன கடுதாசியா...அவரா எழுதியிருக்கார்?" என்ற பரப்பரப்போடு அவர் எங்கோ உயிரோடு இருக்கிறார் என்ற ஒரே திருப்தியில் ஆனந்த மயமாகி அதை வாங்கிப் படிக்க ஆரம்பிக்கிறாள் ராஜம்.

இப்போதுதான் வீட்டிற்குள் வந்த மணி, அவள் வார்த்தைகளை அரைகுறையாய்க் கேட்டவாறு "அப்பாவா? எங்கே இருக்கார்?" என்று கூவியவாறு ராஜத்தின் அருகே உட்கார்ந்து அவளோடு சேர்ந்து அந்தக் கடிதத்தைப் படிக்க முயல்கிறான்.

மணி ஒன்பது அடிக்கிறது...அவர்களில் யாரும் இன்னும் சாப்பிடப் போகவில்லை. அந்த ஒரு கத்தைக் காகிதம் இப்போது முடிவதாக இல்லை.

தங்களை விட்டு எங்கோ விலகிக் கிடக்கும் அவரை முழுமையாக அறிந்துகொள்ளும் ஆவலில் ஆளுக்கு ஒரு பக்கத்தை அவர்கள் படித்துக் கொண்டிருக்கின்றனர்.

அந்தக் காகிதத்தில் ஏதோ ஒரு பக்கத்தைப் படித்துக்கொண்டிருந்த மணி திடீரெனக் கூவுகிறான்: ''வெல்டன்...பாதர். .''

அந்தக் காகிதங்களில் அவர்கள் அறிவது, அவர்கள் கண்களுக்குத் தெரிவது, அவர்கள் தரிசிப்பது—அந்தக் குடும்பத்தைச் சேர்ந்த, இந்த இருபதாம் நூற்றுண்டில் வாழ நேர்ந்துவிட்ட, கணபதி சாஸ்திரிகள் என்ற தனிப்பட்ட ஒரு பிராம்மணரை மட்டும்தானு?

# 8. தவறுகள் குற்றங்கள் அல்ல!

தெரஸா கூறிய வார்த்தைகள் ஒன்றுகூடக் கடுமையானதல்ல. அவற்றைச் சொல்லும்போது அவள் குரல் கூடக் கடினமாக இல்லை.

மென்மையான சுபாவமுடைய தெரஸாவின் மிருதுவான குரலில் வெளிவந்த அந்த வார்த்தைகளில் இன்னும் கூட மரியாதை கலந்திருந்தது. அவரைப் பற்றி அவளுக்கு வருத்தம்தான் மிகுந்திருந்ததே தவிர, அவரை அவமதிக்க வேண்டுமென்ற எண்ணமோ, விரோதமோ அவள் முக பாவத்தில் தெரியவில்லை.

'சீ' என்று அவள் காறித் துப்பியோ அல்லது 'யூ டாமிட்' என்று கத்தியோ தன்னை அவமதித்திருந்தால் கூடத் தேவலாம் போலிருந்தது நாகராஜனுக்கு. அவ்வித அனுபவங்கள் அவருக்கு ஏற்பட்டதுண்டு

அது மாதிரி சந்தர்ப்பங்களில் தன்னை எப்படிக் காப்பாற்றிக் கொள்வது என்று நாகராஜனுக்குத் தெரியும் அவருடைய அதிகாரம், செல்வாக்கு, தோரணை, வயது, சமூக அந்தஸ்து இவையெல்லாமோ, அல்லது இவற்றில் ஏதாவது ஒன்றோ அவருக்குத் துணை வந்து நிற்கும். 'என்ன நின்று என்ன? பட்ட அவமானம் பட்டதுதானே! எவ்வளவு பட்டும் எனக்குப் புத்தி வரவில்லையே!' என்று தன்னையே தன் மனத்துள் கடிந்து கொண்டபோது அவரது கண்கள் வெட்கமற்றுக் கலங்கின. அவர் அவமானத்தாலும் தன் மீதே ஏற்பட்ட அருவருப்பாலும் தலைகுனிந்து உட்கார்ந்து தன்னைப் பற்றிக் கசப்புடன் யோசித்தார்

'சீ! நான் என்ன மனுஷன்' வயசு ஐம்பது ஆகப் போகிறது. தலைக்கு உயர்ந்த பிள்ளையும், கல்லூரியில் படிக்கிற பெண்ணும்.. அவர்களுக்குக் கல்யாணம் செய்து வைத்திருந்தால், இந்நேரம் நான்கு பேரக் குழந்தைகளுக்குத் தாத்தாவாகி இருப்பேன்!...சீ! நான் என்ன மனுஷன்'' என்று பல்லைக் கடித்துக் கொண்டார் இரண்டு கைகளையும் கோட்டுப் பாக்கெட்டிற்குள் நுழைத்து விரல்களை நெரித்துக் கொண்டார் கண்களை இறுக மூடி, நாற்காலியில் அப்படியே சாய்ந்து, தன்னையறியாமல் ''வாட் எ ஷேம்!''... என்று முனகியவாறே தலையை இடமும் வலமும் உருட்டினார். அவருக்கு என்ன செய்வது என்று புரியவில்லை!

தெரஸாவின் அந்த முகமே அவர் நினைவில் வந்து வந்து நின்றது. சற்றுமுன்...

ரத்தமாய்ச் சிவந்து, நெற்றியில் சிகை புரள, உதடுகள் தீப்பட்டவை போல சிவப்புச் சாயம் கலந்து துடிதுடிக்க கண்களிலிருந்து கலங்கிச் சுரந்த கண்ணீருடன்—

"ப்ளீஸ்! லீவ் மீ!...ஐ ரிக்ரட்!..." என்று அவரிடமிருந்து திமிறி விலகிச் சென்று உடல் முழுதும் நடுநடுங்க அவள் நின்ற தோற்றம்...

அவள் கண்களிலிருந்து பெருகிய கண்ணீர்—அவள் தனது ஸ்கர்ட் பாக்கெட்டிலிருந்து கர்ச்சிப்பை எடுத்துத் துடைப்பதற்குள் 'பொட்' டென்று அவரது டேபிளின்மீது—இந்தக் கண்ணாடி விரிப்பின்மேல் விழுந்து இதோ இன்னும் உலராமல் சிதறிக் கிடக்கிற இரண்டு நீர் முத்துக்கள்..

அவர் எதிரே நின்று தான் அழுதுவிட்ட நாகரிகமற்ற செயலுக்கு வருந்தி, "ஐ ஆம் ஸாரி" என்று தனக்குள்ளேயே விக்கியவாறு கர்ச்சிப்பில் முகம் புதைத்துக்கொண்டு அங்கிருந்து தனது அறைக்கு ஓடினாளே—அதோ அவளது ஸ்லிப்பர் சப்தம் இப்போதுதான் ஓய்ந்து, 'பொத்'தென அவள் நாற்காலியில் விழுகிற ஓசை.

அவர் காதில் திரும்பத் திரும்ப அவளது வார்த்தைகளும்—அவர் நினைவில், அவமானமும் துயரமும் கொண்டு அவள் ஓடினாளே அந்த காட்சியும்தான் இந்தச் சில நிமிஷங்களில் திரும்பத் திரும்ப வந்து நிற்கின்றன

அவள் எவ்வளவு பெருந்தன்மையானவள்! எவ்வளவு உயர்ந்த மென்மையான இயல்புகள் கொண்டவள் என்பதை உணர்கையில் அவருக்கு நெஞ்செல்லாம் வலிக்கிறது.

'நான் அவளிடம் இப்படி நடந்து கொள்வேன் என்று அவள் கனவுகூடக் கண்டிருக்க மாட்டாள்' என்பது புரிகையில் தன்னைத் தானே இரு கூறுகப் பிளந்து கொள்ளலாம் போலிருக்கிறது அவருக்கு

ஒரு நிமிஷத்தில் தான் அடைந்துவிட்ட வீழ்ச்சியை எண்ணி எண்ணி அவர் நெஞ்சைப் பிசைந்து கொள்கிறார்.

'தெரஸாவுக்கு எப்படிச் சமாதானம் கூறுவது? இந்த மாசை எப்படித் துடைப்பது? மறுபடியும் அவள் மனத்தில் தனது பழைய கௌரவத்தை எவ்விதம் நிலைநிறுத்துவது?

'ம்...! அவ்வளவுதான். எல்லாம் போச்சு! கொட்டிக் கவிழ்த்தாகி விட்டது! எவ்வளவு பெரிய நஷ்டம்?'—நாகராஜன் நினைத்து

நினைத்துப் பெருமூச்சு விடுகிறார். நெற்றி வியர்க்க வியர்க்கத் துடைத்துக் கொள்கிறார். எங்காவது போய் அழலாம் போல் தோன்றுகிறது.

தான் சில நாட்களாகவே அவள்பால் கொண்ட சபலங்களுக்கு—அவளது நடவடிக்கைகள், புன்சிரிப்பு, உபசரிப்பு, எல்லாவற்றுக்கும் மேலாய்த் தனது வயதையும், தான் அவளிடம் காட்டுகிற பரிவையும் உத்தேசித்து ஒரு தகப்பனிடம் தெரிவிப்பது போல் அவள் தனது வாழ்க்கையின் அவலங்களையும் ஏமாற்றங்களையும் கூறி மனம் கலங்கியது முதலியவற்றைச் சாதகமாகக் கொண்டு, அவளுக்குத் தன் மீது நாட்டம் என்று நம்பிய தனது கேவலத்தை எண்ண எண்ண உள்ளெல்லாம் குமட்டுகிறது அவருக்கு.

அப்படியொரு அசட்டு நம்பிக்கையில்தான், அவள் தடுக்க மாட்டாள் என்கிற தைரியத்தில்தான் அவர் அவளிடம் அப்படி நடந்து கொண்டார்.

இந்தப் பத்து நாட்களாய் வழக்கமாகச் சாப்பாடு பரிமாற வருகிற அந்தக் கன்னையா சொல்லிக் கொள்ளாமல் ஓடிப் போனானே, அந்தத் தேதியிலிருந்து—ஒவ்வொரு நாளும் 'லஞ்ச்' டயத்தில் தெரஸாவும் நாகராஜனும் ஒன்றாகத்தான் உட்கார்ந்து சாப்பிடுகிறார்கள்.

மத்தியானத்தில் ஆபீசிலேயே சாப்பிடுகிற வழக்கத்தை உண்டாக்கியவன் கன்னையாதான். அவன் அவர் வீட்டோடு வந்து சேருவதற்கு முன்—இரண்டு வருஷத்துக்கு முன்னால் வரை, அவர் லஞ்சுக்கு மத்தியானத்தில் வீட்டுக்குப் போய்த்தான் வருவார். ஆனால் வீட்டுக்குப் போனால் சாப்பிட்டோம் வந்தோம் என்று முடிகிறதா? கொஞ்சம் இளைப்பாற வேண்டும்; படுக்க வேண்டும்; சிறு தூக்கம் போடவேண்டும். திரும்ப ஆபீசுக்கு வர நாலு மணி ஆகிவிடுகிறது.

நாகராஜன் எத்தனை மணிக்கு வேண்டுமானாலும் ஆபீசுக்கு வரலாம்; போகலாம். அவரை யாரும் கேட்கமாட்டார்கள். அந்த கம்பெனியின் முதலாளிக்கு அடுத்தபடி அதிகாரம் உள்ளவர் அவர் தான். என்றாலும் சில விஷயங்களில் முதலாளிக்கும் கொஞ்சம் மேலே என்று சொல்லுகிற அளவுக்குப் பொறுப்பும் உடையவர் இருபத்தைந்து வருஷ காலமாக இந்தத் தலைமை ஆபீசில் இருந்து கொண்டே மாகாணம் முழுவதும் பல கிளைகளைத் தோற்றுவித்து இன்றிருக்கும் நிலைக்கு இந்த ஸ்தாபனத்தை உயர்த்தியவர் நாகராஜன் என்றால் அவர் அந்த அளவுக்குப் பொறுப்பும் முதலாளிகளின் நம்பிக்கையும் பெற்றிருப்பதனால்தானே முடிந்திருக்கிறது.

கன்னையா தன் வீட்டோடு வந்த பிறகு ஆபீசுக்குச் சாப்பாடு கொண்டுவந்து தானே அவருக்குப் பரிமாறிவிட்டுப் போக ஆரம்பித்தான். அவர் முக்கியமாக வீட்டுக்குப் போய்ச் சாப்பிடுவதற்கான காரணம், தானே போட்டுக் கொண்டு சாப்பிடப் பழகாததுதான். அது அவருக்குப் பிடிப்பதில்லை.

கன்னையா, நாகராஜன் வீட்டு வேலைக்காரனோ சமையற்காரனோ என்றுதான் எல்லோரும் நினைத்துக் கொண்டிருக்கிறார்கள். ஆனால், அவன் அவரது சொந்த அத்தை மகன் என்பதும் சம வயதுடைய பால்ய கால நண்பன் என்பதும் ரொம்பப் பேருக்குத் தெரியாது. தெரியும்படி அவன் நடந்து கொள்ளவும் மாட்டான்.

அவனுக்கு குடும்பம், கல்யாணம், வீடு, உறவு என்றெல்லாம் ஒன்றுமே ஏற்படவில்லை.

சொந்தக்காரர்கள் வீடுகளில்—அவனைச் சொந்தக்காரன் என ஏற்றுக் கொள்கிற வீடுகளில் வந்து கொஞ்ச நாள் அவன் தங்குவான் தங்கி இருக்கிற காலத்தில் அந்த வீட்டுக்கு அவன் ஒரு பலமாக விளங்குவான் குழந்தைகளுக்குத் தாதிமாதிரியும், கூப்பிட்ட குரலுக்கு ஓடி வரும் சேவகனாகவும் இருப்பான். தோட்டங்கள் கொத்துவான் ; துணி துவைப்பான் ; கடைக்குப் போவான் ; கட்டை பிளப்பான் ; சுமை தூக்குவான் ; சுவையாகப் பேசிக் கொண்டுமிருப்பான்.

'சொல்லிக் கொள்ளாமல் கூட ஓடிப்போனானே அந்த ராஸ்கல்...' என்று இப்போது பற்களை கடிக்கின்ற நாகராஜன் சற்று முன்னால் தான் செய்த காரியத்துக்குக் கூட அவன்தான் பொறுப்பு என்று சுற்றி வளைத்துப் பழியை அவன் தலையில் சுமத்த முயல்கிறார்.

'அந்தப் பயல் ஒழுங்காக வந்து மீல்ஸ் ஸெர்வ் பண்ணி இருந்தால் இவள் இவ்வளவு நெருக்கமாக வந்திருக்கமாட்டாளே !'' என்று நினைத்தபோது கன்னையாவைப் பற்றிய நினைவுகள் அவருக்கு மிருந்தன. .

இரண்டு வருடங்களுக்கு முன்பு ஒரு நாள் இரவு எட்டு மணிக்கு வீட்டுக்குத் திரும்பிய நாகராஜன், காரை ஷெட்டில் நிறுத்துவதற்காகத் திருப்பியபோது ஷெட்டின் ஒரு மூலையில், தாடியும் மீசையுமாய் ஒரு பரட்டைத் தலையன் எழுந்து நிற்பதைப் பார்த்து கார் விளக்கை அணைக்காமல் வெளியே தலைநீட்டி—

"யாரது, அங்கே?..." என்று மிரட்டுகிற தோரணையில் கேட்டார்.

அவன் அருகில் ஓடி வந்து—

"நான்தான் கன்னையா...என்னைத் தெரியலியா மாப்பிளே?" என்று ரகசியம் போல அறிமுகப்படுத்திக் கொண்டபோது, நாகராஜனுக்கு மனசை என்னவோ செய்தது.

"என்னடா இது கோலம்? வாவா" என்று அழைத்து வந்து வீட்டில் உள்ளவர்களுக்குப் பரிச்சயம் செய்து வைத்து அங்கேயே தங்கி இருக்கச் சொன்னார் கொஞ்ச நாட்களில் அவரது குடும்பத்துக்கு அவன் மிகவும் தேவைப்பட்ட மனிதனாக மாறி இருந்தான்.

ஆரம்பத்தில் அவனை வீட்டில் சேர்த்துக் கொண்டதற்காக மற்ற உறவினர்கள் எல்லாம் நாகராஜனையும் அவன் குடும்பத்தினரையும் மிகவும் எச்சரிக்கை செய்தவாறிருந்தனர்.

ஆனால், நாகராஜன் அவற்றைப் பொருட்படுத்தவில்லை. மேலும் அவனைச் சேர்த்துக் கொள்வது தனது கடமையென்று அவர் நினைத்தார் எனினும் அந்தக் காரணங்களை அவர் யாரிடத்தும இதுவரை பகிரங்கப்படுத்திக் கொண்டதில்லை

அந்தப் பழைய பால்ய அனுபவங்களின் நினைவுகளை எப்போதாவது தனியாக இருக்கையில் அவனோடு பகிர்ந்து கொண்டு மகிழ்வார் நாகராஜன்.

அந்தக் காலத்தில் இந்தக் கன்னையா ரொம்ப நல்ல பிள்ளையாக இருந்தான். ஒன்றுமே தெரியாத அவனை புகை பிடிக்கப் பழக்கியதும், மதுவருந்தச் செய்ததும்—அந்த மாதிரியான விளையாட்டுக்களில் ஈடுபடுத்தியதும் நாகராஜன்தான். அவற்றை அவர் மறக்கவில்லை அதன் பிறகு அவை யாவும் ஏதோ ஒரு பருவத்தின் கோளாறு என்று ஒதுக்கி—அல்லது உண்மையிலே ஒரு பருவத்தின் கோளாறுகளாக அவை இவரிடமிருந்து நீங்கிய பின இவரால் பழக்கப்படுத்தப்பட்ட அந்தக் கன்னையன் அவற்றிலேயே வீழ்ந்து அழுந்தி மூழ்கிக் கொண்டிருப்பதாகக் கேள்விப்பட்ட காலங்களில், நாகராஜன் குற்ற உணர்வினால உறுததப் பட்டிருக்கிறார்

நாகராஜனைப் பொறுத்தவரை—அந்தப் பழக்கங்கள் யாவும் மகா பாவங்கள் என்று கருதுகிற—ஒழுக்கக் கண்ணோட்டம் எதனாலும் அவனுக்காக அவர் வருந்தவில்லை. இந்தப் பழக்கங்களுக்கு அடிமையாகி ஒருவன் வாழக்கையின் சகல மரியாதைகளையும் இழப்பது பரிதாபகரமான வீழ்ச்சி என்பதனால் அவனிடம் அவர் அனுதாபம் கொண்டார்.

இப்போதும்கூட நாகராஜன் எப்போதாவது பார்ட்டிகளிலும் சில சமயங்களில் வீட்டிலேயே கூட மதுவருந்துவது உண்டு. அது யாருக்கும் தெரியாது. நாகராஜனும் புகை பிடிக்கிறார்; பெண்களை இச்சையோடு பார்க்கிறார். எல்லாவற்றுக்கும் ஒரு அர்த்தும் அளவும் இல்லாதபோதுதானே மனிதன் தலை குப்புற வீழ்ந்து விடுகிறான்?

அப்படி வீழ்ந்து விட்டவன் கன்னையா. அவன் அப்படி விழக் காரணம் ஏதோ ஒரு வகையில் தானே என்று நினைக்கையில் அவனைப் பார்த்துப் பெருமூச்செறிவார் நாகராஜன்.

பிறர் பார்வையிலும் சமூக அந்தஸ்திலும் அவன் வீழ்ந்துவிட்டவன் தான் என்றாலும்கூட அவனைத் தனது அந்தரங்கத்தில் சமமாகவே பாவித்தார் நாகராஜன். அவனும் அதே மாதிரி அந்த எல்லை மீறாது அவரோடு சமத்துவம் கொண்டான்.

எப்போதாவது தான் மதுவருந்தும்போது அவனையும் அழைத்து அவனுக்கும் கொடுப்பார் அவர் தனக்கு மகுடாபிஷேகம் நடந்த மாதிரி களி கொள்ளுவான் அவன். அப்போதும் கூட மிகவும் வெட்கத்தோடு கையில் தம்ளருடன் ஒரு மூலையில் போய்த் திரும்பி நின்றுகொண்டு மறைவாகக் குடிப்பான். "போதும் போதும்" என்று சொல்லித் தம்ளரை வைத்துவிட்டு ஓடி விடுவான்.

கேட்டால், "நமக்கு இந்தச் சரக்கெல்லாம் சரிப்பட்டு வராது. ரெண்டு ரூபா பணம் குடு மாப்பிளே, எதுக்கு இதெ வேஸ்ட் பண்றே?" என்று பணத்தை வாங்கிக்கொண்டு போனால் இரவில் எந்நேரம் வந்து அவன் ஷெட்டில் படுத்துக் கொள்கிறான் என்று யாருக்கும் தெரியாது.

யாருக்கும் தெரியாமல் அந்தச் செலவுக்காக வாரத்தில் இரண்டொரு தடவை அவர் அவனுக்குப் பணமும் கொடுப்பார்.

அவன் சாப்பாடு பரிமாறிச் சாப்பிடுவது அவருக்கு எப்போதும் ரொம்பத் திருப்தியாக இருக்கும். வீட்டில் இருக்கும்போது கூடச் சில சமயங்களில் அவன்தான் அவருக்குப் பரிமாறுவான்.

நாகராஜனின் மனைவி ஸ்தூல சரீரி. அடிக்கடி அவளுக்கு உடம்புக்கு வந்து விடும் ஈஸிசேரிலிருந்து அவளை எழுந்துவரச் செய்வதைக் கூடியவரை தவிர்க்கவே விரும்புவார் அவர்.

சில சமயங்களில் டிரைவர் இல்லாதபோது கன்னையாவோடு தனியே காரில் செல்கையில் அவனோடு தமாஷாகச் சமத்துவமாய்ப் பழைய காலம் மாதிரிப் பேசி மகிழ்வார் நாகராஜன். அது மாதிரி சமயங்களில் அவனும் தன்னை மறந்து 'டா' போட்டுக்கூடப் பேசுவான். அது ரொம்ப இயல்பாக, சுருதிபிசகாமல் இருக்கும்.

"டேய், கன்னையா... நம்ப செக்ரட்டரி அம்மா எப்படி இருக்கா?" —புடவை கட்டாத அந்தச் சட்டைக்காரி எதிர்ப்படும் போது அவன் நாணிக்கோணி நிற்பதை அவர் பல தடவை கண்டிருக்கிறார். அதனால்தான் கேட்டார்.

அந்த மாதிரிச் சந்தர்ப்பங்களில் முதலில் அவன் சிரிப்பான்.

"சொல்லு... உனக்கு என்ன தோணுது அவளைப் பார்த்தா?"

"எனக்கு என்ன தோணுது?..." மார்பில் முகவாய்படுகிற மாதிரித் தலை குனிந்து கொண்டான் கன்னையா. கொஞ்ச நேரம் கழித்து ஒரு அசட்டுச் சிரிப்புடன் "நீ விட்டு வெச்சிருப்பியா மாப்பிள்ளே!...எனக்கு தெரியும்டா" என்று முழங்கையால் இடித்துக் கொண்டு கிளுகிளுத்துச் சிரித்தான்.

"சீ! சீ! அதெல்லாம் இல்லே. நீ முன்ன மாதிரியே என்னை நெனைச்சுக்கிட்டு இருக்கியா? வயசாச்சே!" என்பார் நாகராஜன்.

"அப்படீன்னா...அவளுக்கு உம்மேலே ஒரு கண்ணு இருக்குது அது தெரியுது" என்று கண்களைச் சிமிட்டி அவரைக் குஷிப் படுத்தினான் அவன்.

'அந்தப் பாவிதான் இந்த எண்ணத்துக்கு முதல் பொறி வைத்தவனோ?'

இவ்வளவும் அந்தரங்கமாய்ப் பேசுவானே தவிர, அவள் முன்னிலையில் இடுப்பில் கட்டிய துண்டை அவிழ்க்காமல், தலை நிமிர்ந்து பார்க்காமல் அவருக்குச் சாப்பாடு பரிமாறுவான்! தட்டைப் பார்த்து எது வாய்க்கு ருசிக்கிறது என்று அறிந்து, கேட்குமுன் பரிமாறுவான்

அவன் பரிமாறுவதையும் அவருக்குப் பணிவிடை புரிவதையும் தெரஸா பார்த்திருக்கிறாள்

அதனால்தான், அவன் வராமல்—அன்று அந்த டிரைவரே அவருக்குப் பரிமாறத் தெரியாமல்...இவர் போட்ட சத்தத்தில் பயந்து, கையிலுள்ளதைக் கீழே போட்டு—இவர் ஒன்றுமே சாப்பிடாமல் 'எடுத்துக்கொண்டு போ' என்று கத்திவிட்டு, அன்று ஓட்டலிலிருந்து டிபன் வரவழைத்துச் சாப்பிட்டதையெல்லாம் கவனித்த தெரஸா, அடுத்த நாள் மத்தியானம் அவர் தானே பரிமாறிக் கொள்ள முனைகையில்—

"உங்களுக்கு ஆட்சேபனை இல்லையென்றால் நான் பரிமாறலாமா?" ...என்று விநயத்துடன் ஆங்கிலத்தில் கேட்டாள்.

அப்போது நாகராஜனுக்குக் கன்னையா கூறியது நினைவு வந்தது: 'அவளுக்கு உம் மேலே ஒரு கண்ணு இருக்குது. அது எனக்குத் தெரியுது'

நான்கு வருஷமாகத் தன்னிடம் ஸ்டெனேவாகப் பணியாற்றும் தெரஸாவை அன்றுதான் அவர் அப்படி ஒரு பார்வை பார்த்தார்.

"யூ லுக் நைஸ் டுடே!" என்று அவள் அழகை அவர் புகழ்ந்தார்.

"தாங்க்யூ" என்று அவள் நன்றி கூறினாள்.

அன்று அவளையும் தன்னோடு அமர்ந்து சாப்பிடச் சொன்னார் அவர்.

முதலில் தான் டிபன் பாக்ஸில் கொண்டு வந்திருக்கும் எளிய உணவை அவரோடு உட்கார்ந்து சாப்பிட, அவள் தயங்கினாள். ஆனால், அவர் மிகவும் வற்புறுத்தவே அவளும் அவர் எதிரே அமர்ந்து ஒரே மேஜையில் சாப்பிட்டாள்.

சாப்பிடும்போது அவள் கன்னையாவைப் பற்றிக் கேட்டாள்.

"வேர் ஈஸ் தட் மேன்?"

"அந்த ராஸ்கல் ஐந்நூறு ரூபாய் பணத்தைத் திருடிக்கொண்டு, சொல்லாமல் கொள்ளாமல் ஓடிப் போய்விட்டான்" என்று ஆத்திரமாகக் கூறினார் நாகராஜன்.

"ஐநூறு ரூபாயா? பணத்தை அவ்வளவு அஜாக்கிரதையாக வேலைக்காரர்கள் கண்பட வைக்கலாமா?"

"அவன் வேலைக்காரன் அல்ல. அவன் என்னுடைய கஸின்!"

"ஓ! ஐ ஆம் ஸாரி!"

"பரவாயில்லை. திருட்டுப் பயலுக்கு வேலைக்காரன் பட்டமே கொஞ்சம் அதிகம்தான்..."

"புவர் மேன்!" என்று அவள் அவனுக்காக வருத்தப்படுவது அவருக்கு ஆச்சரியமாக இருந்தது. "ஹி வாஸ் வெரிநைஸ்-அண்ட்-ஹெல்ப்ஃபுல்!..." என்று முனகிக் கொண்டாள்.

நாகராஜனும் பெருமூச்செறிந்தார்.

நாகராஜன் தனக்கு வந்திருந்த உணவு வகைகளை அவளோடு பகிர்ந்து கொண்டார். அவள், அவர் அன்போடு தருவதை நன்றியோடு ஏற்றுக் கொண்டாள். அவளும் கன்னையா மாதிரி மிகவும் பரிவோடும் ருசி அறிந்தும் அவருக்குப் பரிமாறினாள். மிகுந்த உரிமையோடு அவளது டிபன் பாக்ஸ் உணவையும் அவர் கேட்டு வாங்கிச் சாப்பிடுவார்.

ஆபீஸ் விஷயம் தவிர வேறெதுவும் பேசாத அவர்கள் இந்த 'லஞ்ச் அவரில்' பொது விஷயங்களையும், சொந்த விஷயங்களையும் பரிமாற்றம் கொள்ள ஆரம்பித்தனர்.

முன்பெல்லாம் அந்த 'ஏர்-கண்டிஷண்ட்' அறையில் அவருக்காக உள்ள ஈஸிசேரில் சாப்பிட்ட பிறகு சற்றுப் படுத்துக் கண்ணயர்வார். இந்தப் பத்து நாட்களாக ஈஸிசேரில் சாய்ந்து மேஜையருகே உட்கார்ந்திருக்கும் தெரஸாவுடன் ஏதாவது பேசிக்கொண்டே இருந்தார் நாகராஜன்.

அவள் தன்னைப் பற்றி எதையுமே மறைக்காமல், நம்பிக்கைக்குரிய ஒரு பெரிய மனிதரின் பரிவுக்குக் காட்டுகிற நன்றியுணர்ச்சி போலும், இத்தகைய ஒரு கனவான் தன்பால் காட்டுகிற ஈடுபாட்டுக்குக் கொள்ளும் பெருமிதம் போலும் மனம் விட்டுப் பேசினாள். குழந்தை மாதிரி சிரித்தாள். தனது சிரிப்பாலும், பேச்சாலும் இவர் மிகவும் மகிழ்ச்சியுறுகிறார் என்பதால், இவரை மகிழ்ச்சியூட்டவே அவள் சிரித்தும் கலகலப்பாகப் பேசியும் ஒரு நல்ல உடனிருப்பாய்த் திகழ்ந்தாள். அவர் அவளது பேச்சை மாத்திரம் அல்லாது அவளையே முழுமையாய் ரசித்தார். அவளது சிரிப்பையும் பரிவையும், கலகலப்பையும் மோகனமான சாகஸமாகக் கருதி தன்னை ஒவ்வொரு நாளும் முழுமையாய் இழக்க முனைந்தார்.

சில தினங்களுக்கு முன் அவள் அடுத்த வாரம் வரப்போகும் தனது பிறந்த தினத்துக்கு வீட்டுக்கு வரவேண்டும் என்று அவரை அழைத்தாள். இந்த நான்கு ஆண்டுகளாக அவருக்கு ஒரு ஸ்வீட் தந்து ஆசிபெறுவதைத் தவிர, அவரை விருந்துக்கு அவள் அழைத்த தில்லை. அதற்குக் காரணம், இந்த நான்கு ஆண்டுகளாய் அவர் அவளுக்கு எஜமான் ஸ்தானத்தில இருக்கிற ஒருவராக இருந்து இப்போதுதானே ஒரு நல்ல நண்பராகவும் மாறியிருக்கிறார் என்கிற இயல்பான காரணத்தை விடுத்து இயல்பில்லாத ஏதோ ஒன்றைக கற்பித்துக் கொண்டார் நாகராஜன

"வில் இட் பி எ காக்டெயில் பார்ட்டி?"—என்று கண்களைச் சிமிட்டியவாறு அவர் கேட்டபோது—

"அஃப்கோர்ஸ்! என் தந்தை—தாய் இருவருமே பர்மிட் ஹோல்டர்கள்" என்று அவள் கூறினாள்.

"நீ ஏன் ஒரு பர்மிட் வாங்கிக் கொள்ளக் கூடாது?" என்றார் நாகராஜன்.

"நோ! நான் குடிப்பதில்லை" என்றாள் தெரஸா.

"உன் பிறந்த தினத்தன்று நான் உன்னைக் குடிக்க வைக்கப் போகிறேன் பார்!"—என்றார் நாகராஜன்.

அவள் சிரித்துக்கொண்டே, "அது மாதிரியான விசேஷ சந்தர்ப் பங்களில் 'ஃபார் தி கம்பெனி'ஸ் ஸேக்' கொஞ்சம் ருசி பார்க்கறது

உண்டு" என்று சொல்லித் தொடர்ந்து அவள் ஆங்கிலத்தில் எப்படி கிறிஸ்துமஸ்ஸின்போது அவளது தந்தை வீட்டிலிருக்கும் குழந்தைகளுக்கெல்லாம் ஒயின் தருவார் என்று விளக்கினாள்.

தங்களது கலாச்சாரப்படி குடிப்பதும், ஆண்களும் பெண்களும் இணையாக நடனமாடுவதும் எவ்வளவு பரவச மிக்கது என்பதைத் தன்னை மறந்த லயத்துடன் அவள் அவருக்குச் சொன்னாள். அவ்விதம் சொல்லிக் கொண்டிருக்கையில் அவள் தனது போன வருஷப் பிறந்த தின வைபவத்தின் நிகழ்ச்சிகளை நினைவில் கொண்டாள். அந்த நினைவில், அப்போது அவளது நம்பிக்கைக்கும் காதலுக்கும் பாத்திரமாய் இருந்து பின்னர் அவளிடமிருந்து விலகிப்போன ஒரு 'பாய்-ஃபிரண்'டைப் பற்றியும் அவரிடம் விவரித்தாள். அப்போது அவள் சற்று உணர்ச்சி வயமானாள் பிறகு தானே சமாளித்துக் கொண்டு, புன்னகை செய்தாள்.

இவையெல்லாவற்றையுமே நாகராஜன் வேறு ஒரு கோணத்திலிருந்து புரிந்து கொண்டார்.

அதன் விளைவுதான் சற்று நேரத்துக்கு முன் வழக்கம் போல் உல்லாசமாகச் சாப்பிட்டு முடிந்ததும் அவள் மேஜையருகே அமர்ந்து தனது கைப்பையிலிருந்து சிறு கண்ணாடியை எடுத்து உதட்டுச் சாயத்தைச் சரி செய்து கொண்டிருக்கையில டவலில் கையைத் துடைத்துக்கொண்டே அவள் பின்னால் வந்து நின்ற நாகராஜன்...

சற்று முன்...

ரத்தமாய்ச் சிவந்த முகத்தில் சினை புரள, உதடுகள் தீப்பட்டவை போல சிவப்புச் சாயம் கலந்து துடிதுடிக்க, கண்களிலிருந்து கலங்கிச் சுரந்த கண்ணீருடன், "ப்ளீஸ்! லீவ் மீ! ஐ ரிக்ரட் ஃபார் எவரிதிங்..." என்று அவரிடமிருந்து திமிறி விலகி, உடல் முழுவதும நடுநடுங்க அவள் நின்ற தோற்றம்..

தெரஸாவின் அந்த முகமே அவர் நினைவில வந்து நிற்கிறது.

மணி இரண்டு.

மத்தியான இடை வேளைக்குக் கலைந்து போன ஆபீஸ் ஊழியர்களின் நடமாட்டமும், டைப்ரைட்டர்களின் இயக்கமும் மந்தமாக அந்த ஏர்-கண்டிஷண்ட் அறைக்குள் கேட்கிறது

நாகராஜன் ஒரு மணி நேரத்துக்குள் ஏழு எட்டு சிகரெட்டுகளை ஊதித் தீர்த்திருந்தார்.

தெரஸாவை அழைக்கின்ற 'காலிங் பெல்'லின் பொத்தானை அழுத்தினார்.

அடுத்த விநாடி தெரஸா அவர் எதிரே வந்து நின்ருள். நாகராஜனுல் தலை நிமிர்ந்து அவளைப் பார்க்க முடியவில்லை. அவர் தலை குனிந்தே இருந்தது.

"ஐ ஆம் ஸாரி—தெரஸா!"

அவள் என்ன பதில் கூறினுள் என்று அவருக்கு விளங்க வில்லை. 'அவள் இன்னும் அழுது கொண்டு அதே கோலத்தில்தான் நிற்கிருளோ? தனது ராஜிநாமாக் கடிதத்தை முகத்தில் விட்டெறியப் போகிருளோ?' என்ற குழப்பத்துடன் அவர் தலை நிமிர்ந்து அவளைப் பார்த்தார்.

அவள் எப்போதும்போல் எதுவுமே நடக்காதது போன்று, சற்று முன் கர்ச்சிப்பில் முகம் புதைத்துக் கொண்டு ஓடியது தானல்லாதது போல் ஒரு புன்முறுவலும், கையில் ஷார்ட் ஹாண்ட் நோட்ஸ் எடுக்கும் ஒரு சிறு புத்தகமும் பென்சிலுமாய் வந்து நின்றிருந்தாள்.

இவள் ராஜிநாமாச் செய்யப்போவதில்லை என்று அவருக்குப் புரிந்தது. அவள் வந்து நின்ற கோலம் தனது டிக்டேஷனை எடுத்துக் கொள்ளக் காத்திருப்பது போல் தோன்றியது. அன்று பல வேலைகள் —பல கடிதங்கள் எழுத வேண்டிய வேலைகள் இருப்பது அவளுக்குத் தெரியும். எல்லாவற்றுக்கும் முதல் ஒரு கடிதம் டிக்டேட் செய்ய வேண்டும் என்ற எண்ணம் திடீரென இந்த நிமிஷம்தான் அவருக்குத் தோன்றியது.

சில நேரங்களில் கடிதங்களை அவர் எழுந்து நடந்து கொண்டே டிக்டேட் செய்வார். அது போல அவர் எழுந்து தனது நாற்காலிக்குப் பின்னுல் தலையைக் குனிந்த வண்ணம் நடந்தார். பிறகு அவளைப் பார்த்து, "ப்ளீஸ்—ஸிட்டௌன்" என்றதும் தெரஸா அவரது மேஜைக்கு முன்னுல் இருந்த நாற்காலியில் அமர்ந்தாள்.

"டியர் மிஸ் தெரஸா..." என்ற அவரது குரல் கேட்டு—

"எஸ், ஸார்" என்று நிமிர்ந்தாள் தெரஸா

"புட் டவுன்! திஸ் ஈஸ் எ லெட்டர்"—'இது கடிதம், எழுதிக் கொள்' என்று அவர் சொல்லவும் அவள் மௌனமாகத் தனது கடமையென எழுத ஆரம்பித்தாள். அவர் முகம் திரும்பி தன் முதுகு மட்டுமே அவளுக்குத் தெரிய நின்று கொண்டு ஆங்கிலத்தில் சொன்னுர்:

"மிஸ் தெரஸா...ஒரு மகளைப்போல் கருதி அன்பு காட்ட வேண்டிய உன்னிடம் முறை கேடாக நடந்து கொண்டதற்காக, நான் வெட்கப்படுகிறேன். என்னை மன்னித்து விடுவதும், அல்லது தண்டிப்பதும் உனது மனேபாவத்தைப் பொறுத்தது. நான் உன்

கணிப்பில் இருந்து, தரத்திலிருந்து, உயரத்திலிருந்து, ஒரு விநாடியில் வீழ்ச்சியுற்று விட்டேனே, இதுதான் எனக்குத் தண்டனை.

"தெரஸா... நான் ஏன் அப்படிச் செய்தேன் என்று எண்ணி எண்ணிப் பார்க்கிறேன்.

"இது, இப்படி நான் நடந்து கொள்வது இதுவே முதல் தடவை அல்ல. உன்னிடம் எனது பலவீனத்தை ஒளிவின்றி ஒப்புக்கொள்வதன் மூலம், அப்படி ஒப்புக் கொள்ளுகிற பக்குவம் இந்த நிமிஷம் எனக்கு ஏற்படுவதன மூலம் என்னைப் பிடித்திருந்த ஒரு வியாதி, ஒரு விகாரம் என்னிடமிருந்து விலகுகிறது என்ற நம்பிக்கையோடு இதனை உன்னிடம் சொல்லுகிறேன். நீ வயதில் எவ்வளவு இளையவளாக இருப்பினும், பெருந்தன்மை மிகுந்தவள்; கண்ணியமானவள் என்று நான் உணர்ந்திருக்கிறேன். எனவேதான், பாவ மன்னிப்பு போல் உன்னிடம் 'கன்ஃபெஸ்' செய்து கொள்கிறேன்.

"உன்னிடம் நடந்து கொண்டது போல முறைகேடாக நான் பல சந்தர்ப்பங்களில் நடந்து கொண்டிருக்கிறேன்.

"பிரயாணங்களிலும் தியேட்டரிலும் ஏற்படுகிற நெருக்கத்தைப் பயன்படுத்திக் கொண்டு நான் முறைகேடாக நடந்ததுண்டு. அபபோது, அவர்கள் ஏதோ ஒரு அச்சத்தாலும், அவமானத்துக்கு அஞ்சியும், நாகரிகம் கருதியும் அமைதியாய் இருப்பதை, நான் சம்மதம எனக் கருதி ஏமாந்திருக்கிறேன். பின்னர் அதற்காக வருந்தியதும் உண்டு. நான் இப்போதுதான் அறிகிறேன் இது ஒரு நோய். இதிலிருந்து உனது பெருந்தன்மையால் நான் குணமடைகிறேன். நீ இதை மறந்து ஒரு தந்தை உங்கள் மரபுபபடி ஒரு மகளை அன்பு காரணமாய் முத்தமிட்டதாகக் கொள்ள வேண்டுகிறேன். அல்லது இந்தக் குற்றத்துக்கு எனது இந்த வீழ்ச்சி மாத்திரம் போதாது எனின் நீ தருகிற எந்தத் தண்டனையையும் ஏறகச் சித்தமாயிருக்கிறேன்—" என்று கூறிச் சுமை இறக்கிய வழிப்போக்கன் மாதிரி ஆச்வாசத்துடன் அவளைப் பார்த்தார் நாகராஜன்.

தெரஸா கண்களைக் கர்ச்சிபபால் இரண்டு முறை ஒத்திக் கொண்டாள். அவளது மூக்கும் கன்னங்களும் கன்றிச் சிவந்திருந்தன.

"அதை டைப் செய்து கொண்டு வா" என்று அவளை அனுப்பிய பின் ஒரு சிகரெட்டைப் பற்ற வைத்துக் கொண்டு தனது இருக்கையில் அமர்ந்தார் நாகராஜன். தெரஸாவின் அறையில் டைப் ரைட்டரின் ஓசை படபடத்தது

தெரஸா டைப் செய்த காகிதங்களைக் கொணர்ந்து அவர் முன் மேஜை மீது வைத்துவிட்டு அவர் முகத்தையே பார்த்தவாறு

நின்றாள். அவர் கண்ணாடியை எடுத்து அணிந்து கடிதத்தின் முதல் வரியை "மரியாதைக்குரிய நண்பரே!" என்னும் ஆங்கில வார்த்தைகளை உச்சரித்தவாறே அவளைப் பார்த்தார்.

அவள் பணிவுடன் தலை கவிழ்ந்தாள்.

அவர் தொடர்ந்து அதைப் படிக்கலானார்: "நீங்கள் என்னிடம் டிக்டேட் செய்து—டைப் செய்து கொண்டுவரப் பணித்த உங்கள் கட்டளையை நிறைவேற்றாமல் வேறொரு கடிதத்தைக் கொண்டு வந்து உங்களிடம் தருகிற எனது செயலை முதலில் மன்னிப்பீர்களாக. நீங்கள் மனம் திறந்து பேச ஒரு வாய்ப்பாகத்தான் அதை ஒரு கடிதமாக 'டிக்டேட்' செய்திருக்கிறீர்கள். என்னிடம் மன்னிப்புக் கோருகிற ஒரு கடிதத்தை என்னைக் கொண்டே எழுத வைத்தது உங்களுடைய வெள்ளை மனத்துக்கு மேலும் ஒரு சான்று. கடிதம் என்று சொல்லப்படுகிற உங்கள் மனம் திறந்த பேச்சில் மிகவும் சத்தான—என் எண்ணத்தை அப்படியே பிரதிபலித்த வாசகம்: 'ஒரு தந்தை உங்கள் மரபுப்படி ஒரு மகளை அன்பு காரணமாய்' என்று கூறினீர்களே அதுதான். நான் அப்படிக் கருதிச் சமாதான முற்ற பிறகு நீங்களும் அவ்விதம் சொன்னது எனக்கு அளவில்லா ஆனந்தம் தருகிறது. இது உங்கள் வீழ்ச்சியல்ல. இது ஒரு சறுக்கல். ."

இந்த இடத்தில் அந்த ஆங்கிலச் சொற்களை அவளைப் பாராட்டுகிற தோரணையில் "ஜஸ்ட் எ ஸ்லிப், நாட் எ ஃபால்!" என்று ஒரு முறை வாய் விட்டு உச்சரித்துக் கொண்டே அவளைப் பார்த்த பின் கடிதத்தைத் தொடர்ந்தார் நாகராஜன்.

"நீங்கள் கூறுகிற மாதிரி அது ஒரு வியாதி யெனில், அதற்குத் தண்டனை யல்ல, சிகிச்சையே தேவை. அப்படிப்பட்ட முறை கேடான நடத்தைகள் தவறுகள்தான்; ஆனால், குற்றங்கள் அல்ல. குற்றங்கள்தான் தண்டிக்கப்படுவன. தவறுகள் திருத்தப்படுவன; மன்னிக்கப்படுவன. நான் உண்மையான கிறிஸ்தவப் பெண். மன்னிக்கிறவர்களே மன்னிக்கவும் படுவார்கள். நான் உங்களை மன்றாடிக் கேட்டுக் கொள்கிறேன்: இதனை மறந்து இதற்காக வருந்துவதை விடுங்கள்.

"நமது ஒப்பந்தப்படி நீங்கள் என் பிறந்த தின விருந்துக்கு வருகிறீர்கள். உங்கள் நலனுக்காக நான் குடிப்பேன்

"உங்கள் உண்மையுள்ள,—"

"தெரஸா! நீ எவ்வளவு உயர்வான ஆத்மா!"

இரவு எட்டு மணிக்கு வீடு திரும்பிய நாகராஜன் காரை ஷெட்டில் விடுவதற்காகத் திருப்பியபோது ஷெட்டின் ஒரு மூலையில், தாடியும் மீசையுமாய்ப் பரட்டைத் தலையுடன் உட்கார்ந்திருந்த கன்னையா எழுந்து நின்றான். சிறிது நேரம் விளக்கை அணைக்காமல் அவனைக் கூர்ந்து பார்த்தார். வெளிச்சத்தாலோ வெட்கத்தாலோ கூசிக் குறுகி முகத்தை மூடிக்கொண்டான் கன்னையா.

வராந்தாவில் நாகராஜனின் மகளும் மனைவியும் கன்னையாவை உள்ளே விடாமல் தடுப்பதற்காக துவாரபாலிகைகளாக நின்றிருந்தனர்.

"அவன் வந்தால் உள்ளே நுழைய விடாதீங்க" என்று நாகராஜன் தான் உத்திரவிட்டிருந்தார்.

நாகராஜன் காரிலிருந்து இறங்கியதும் கன்னையா அவருகே ஓடி வந்து அழுதான்.

"மாப்பிளே, என்னமோ தெரியாம செஞ்சுட்டேன். ஏன் செஞ்சேன்னு தெரியல்லே. அதைச் செஞ்ச அடுத்த நிமிஷத்திலேருந்து ஒவ்வொரு நிமிஷமும் வருத்தப்பட்டேனே ஒழிய சந்தோஷமாவே இல்லே, மாப்பிளே அறிவு கெட்டவன் நான்" என்று நெற்றியில் அடித்துக்கொண்டு அவன் அழுதான்

நாகராஜன் மௌனமாக 'டை'யைத் தளர்த்திக் கொண்டு வராந்தாவில் கிடந்த பிரம்பு நாற்காலிகளில் ஒன்றில் அமர்ந்தார்

அவர் மகளும் மனைவியும் உள்ளே போயினர். கன்னையா வெளிச்சத்தில் வந்து அவர் எதிரே நின்றான்.

அவன் மௌனமாகத் தலைகுனிந்து நிற்பதைப் பார்க்க அவருக்குப் பரிதாபமாக இருந்தது அவர் நினைத்தார் :

'இவன் வெறும் திருடன் என்றால், இப்போது ஏன் திரும்பி வர வேண்டும்? இந்த வீட்டில உழைக்கிற உழைப்பை எங்கே தந்தாலும் இவன் வயிற்றுக்குச் சோறு கிடைத்து விடுமே...எனவே, பிழைப்புக்காக இவன் திரும்பி வந்திருக்கிறான் என்று நினைப்பது பேதைமை. இதோ எதிரே நேற்றிலிருந்து பூக்க ஆரம்பித்திருக்கிறதே இந்த மல்லிகைச் செடி, இதைக் கொண்டு வந்து நட்டு, நீர் வார்த்த பாசம் இவனைத் திரும்பி வர இழுத்திருக்காதா ?...ஒவ்வொரு வேளை சாப்பிடும் போதும், நான் இவனை நினைக்கிற மாதிரியே இவனும் என்னை நினைத்திருக்கமாட்டானா? பின் ஏன் அப்படி அந்தப் பணத்துக்கு ஆசைப்பட்டு அதை எடுத்துக் கொண்டு ஓடினான் ...?'

"ஏண்டா, என்னைக் கேட்டால், உனக்கு நான் பணம் தந்திருக்க மாட்டேனா? ஏன் திருடன் மாதிரி இப்படிச் செய்தே?"—வீட்டி லிருக்கும் மற்றவர்களின் திருப்திக்காகச் சற்று உரத்த குரலில் விசாரித்தார் அவர்.

"அதான் யோசிச்சு யோசிச்சுப் பார்க்கறேன். பணத்தை அந்த 'ஷெல்'பிலே பார்த்தப்போ...வேற யாருமே இல்லே. யாருமே இல்லாத இடத்தில் பணத்தைப் பார்த்தா எடுத்துக்கணும்கிற திருட்டுப் புத்தியிலே எடுத்துட்டேன். இது முதல் தடவையா?... எத்தனையோ தடவை இந்த மாதிரி, சீ!"—அவன் தன்னைத்தானே நொந்து கொண்டான்.

இன்று மத்தியானம் இதே நிலையில் தான் இருந்ததை நாகராஜன் எண்ணிப் பார்த்தார்.

"அது ஒரு வியாதிடா" என்றார்.

"ஆமாம். வியாதிதான்" என்று தலையில் அடித்துக் கொண்டான் கண்ணையா. "நீ என்ன தண்டனை குடுத்தாலும் ஏத்துக்கறேன் மாப்பிளே..." என்று கைகளைப் பிசைந்து கொண்டு கண்ணீர் உகுத்தான்.

நாகராஜன் நிர்மலமாய்ச் சிரித்தார்.

"வியாதிக்கு சிகிச்சைதான் தேவை, தண்டனை இல்லே" என்று சொல்லும்போது அவருக்கே கண் கலங்கிற்று.

"உன் வியாதி நீங்கிப் போச்சு...மனப் பூர்வமா மன்னிக்கறது தான் இதுக்குச் சிகிச்சை. இந்தச் சிகிச்சையை உனக்கு யாருமே இதுவரை செய்ததில்லே. இனிமே சரியாயிடும். போ, உள்ளே! நீ செய்தது தப்புத்தான்—தண்டனை தரவேண்டிய குற்றமில்லே" என்று அவர் சொல்வதைக் கேட்டுக் கூடத்தில் உட்கார்ந்திருந்த அவரது மகளும் மனைவியும் 'எவ்வளவு பெருந்தன்மை மிக்க மனிதர் இவர்' என்று நாகராஜனைப் பற்றி எண்ணிப் பெருமிதம் கொண்டனர்.

அவர்களுக்கு என்ன தெரியும்?

மன்னிக்கப்பட்டவர்களே மன்னிக்கிறார்கள் என்பது.

# 9. அக்ரஹாரத்துப் பூனை

**எ**ங்கள் ஊர் ரொம்ப அழகான ஊர். எங்கள் அக்ரஹாரத் தெரு ரொம்ப அழகானது. எங்கள் அக்ரஹாரத்து மனிதர்களும் ரொம்ப அழகானவர்கள். அழகு என்றால் நீங்கள் என்னவென்று நினைத்துக் கொண்டிருக்கிறீர்களோ எனக்குத் தெரியாது. என்னைப் பொறுத்த வரை ஒன்றின் நினைவே சுகமளிக்கிறது என்றால் அது ரொம்ப அழகாகத்தானிருக்க வேண்டும். முப்பத்தைந்து வருஷங்களுக்கு முன்னால் அங்கே, அந்தத் தெருவில் ஓர் பழங்காலத்து வீட்டின் கர்ப்பக் கிருகம் மாதிரி இருளடைந்த அறையில் பிறந்து, அந்தத் தெருப் புழுதியிலே விளையாடி, அந்த மனிதர்களின் அன்புக்கும் ஆத்திரத்துக்கும் ஆளாகி வளர்ந்து, இப்போது பிரிந்து, இருபத்தைந்து வருஷங்களான பிறகும் அந்த நினைவுகள், அனுபவங்கள், நிகழ்ச்சிகள் யாவும் நினைப்பதற்கே சுகமாக இருக்கிறதென்றால், அவை யாவும் அழகான அனுபவங்களும், நினைவுகளும் தானே!

நான் பார்த்த ஊரும்—'இவை என்றுமே புதிதாக இருந்திருக்க முடியாது' என்ற உறுதியான எண்ணத்தை அளிக்கின்ற அளவுக்குப் பழசாகிப் போன அந்த அக்ரஹாரத்து வீடுகளும் 'இவர்கள் என்றைக்குமே புதுமையுற மாட்டார்கள்' என்கிற மாதிரி தோற்றமளிக்கும் அங்கு வாழ்ந்த மனிதர்களும் இப்போதும் அப்படியேதான் இருக்கிறார்கள் என்று என்னால் நிச்சயமாகச் சொல்ல முடியாது. எனினும், அவர்கள் அப்படியே இருக்கிறார்கள் என்று நினைத்துக் கொள்வதிலே ஒரு அழகு இருக்கிறது; சுகம் இருக்கிறது.

நான் இப்போது ரொம்பவும் வளர்ந்து விட்டேன்; ரொம்பவும் விஷயங்கள் தெரிந்து கொண்டு விட்டேன். என்னிடமிருந்த குறும்புத்தனங்கள் எவ்வளவோ நீங்கி விட்டன. ஆனாலும் கற்பனையாக இத்தனை மைல்களுக்கப்பாலிருந்து அந்த ஊரின் தெருவுக்குள் பிரவேசிக்கும் போது—கற்பனையால் தூரத்தை மட்டும்தான் கடக்க முடியுமா?—காலத்தையும் கடந்து நான் ஒரு பத்து வயதுச் சிறுவனாகவே நுழைகிறேன்.

அந்தக் குளத்தங்கரை ஓரமாக நான் வரும்பொழுது, எனது பிரசன்னத்தைக் கொஞ்சம் கூடப் பொருட்படுத்தாமல் அந்தப் பெண்கள் குளித்துக் கொண்டிருக்கும்போது, குளக்கரைப் படியிலே

நான் சற்று உட்கார்ந்து கொள்கிறேன். அங்கு சுகமாகக் காற்று வரும். குளத்திலே தண்ணீருக்கு மேல் ஓர் அடி உயரத்துக்கு மீன்கள் துள்ளிக் குதிக்கும்—கூழாங் கற்களைப் பொறுக்கிக் குளத்துக்குள் எறிந்தவாறு எவ்வளவு காலம் வேண்டுமானாலும் உட்கார்ந்திருக்கலாமே — எங்கெங்கே பரந்து என்ன வாரிக் கட்டிக் கொண்டோம்?—

வெங்கிட்டு, உத்தண்டம், சுந்தரம், தண்டபாணி எல்லாரும் பெண்கள் படித்துறைக்கும் ஆண்கள் படித்துறைக்குமிடையே உள்ள கட்டைச் சுவரின் மீது வரிசையாக வந்து நின்று, ஒவ்வொருவராக 'தொபுக்' 'தொபுக்' என்று குதித்த பின்னர், ஈரம் சொட்டச் சொட்ட ஒரு 'ரிப்பன்' கோவணத்தை இழுத்துச் செருகிக்கொண்டு மறுபடியும் சுவரின் மீது ஏறி வந்து வரிசை அமைக்கின்றனர்.

நான் எப்போதுமே தனி. என்னை அவர்கள் சேர்த்துக் கொள்ள மாட்டார்கள். நான் துஷ்டனும்.

நான் அந்தச் சிறுவர்களுடன் சேராமல் அமைதியாக உட்கார்ந்திருப்பதைப் பார்க்கும் பெரியவர்கள் என்னை உதாரணம் காட்டிப் பேசுவார்கள். நான் விஷமம் செய்யாமல் 'தேமே'னென்றிருக்கிறேனும். நான் அடக்கமான பதவிசான பையனும்...'சீ, பாவம்டா! அவனையும் சேத்துண்டு வெளையாடுங்களேன். போனா போறது; நீ வாடா அம்பி. அவா உன்னை சேத்துண்டு வெளையாடலேன்னா ஒண்ணும் கொறைஞ்சு போயிட மாட்டே... நீ வாடா, நான் உனக்குப் பட்சணம் தர்றேன்...காப்பிப் பொடி அரைக்கலாம் வரயா?...' என்றெல்லாம் என் மீது அன்பைச் சொரிகின்ற பெரியவர்களின் அரவணைப்பு எனக்கு மனசுக்கு இதமாக வெது வெது என்றிருக்கும். நான் அவர்களுக்குக் காப்பிப் பொடி அரைத்துக் கொடுக்கிறதிலிருந்து சில நேரங்களில் கால் அமுக்கி விடுவதுவரை எல்லாக் காரியங்களும் செய்வேன். என் அம்மா சொன்னால் மட்டும் கேட்க மாட்டேன் 'போ! போ!' என்று ஓடுவேன்.

எனக்குப் பத்து வயசாகறதுக்குள்ளேயே என் அம்மாவுக்கு ஐந்து கொழந்தைகள். தாயின் அன்போ அரவணைப்போ எனக்கு நினைவு கூட இல்லை.

என் அம்மா என்னைக் கூப்பிடற பேரே 'ஏ! கடன்காரா'தான். ஊருக்கு, தெருவுக்கு, மற்றவர்களுக்குப் பதவிசாகத் 'தேமே'னென்று தோற்றமளிக்கிற நான், வீட்டில் அவ்வளவு விஷமங்கள் செய்வேன்.

என்ன விஷமம்? ஏதாவது ஒரு குழந்தை ஓடி வரும்போது 'தேமே'னென்று உட்கார்ந்திருக்கும் நான் 'தேமே'னென்று

குறுக்கே காலை நீட்டுவேன்...கீழே விழுந்து 'ஓ' வென்று அழும் குழந்தைக்குச் சில சமயங்களில் மோவாயிலிருந்தோ பல்லிலிருந்தோ ரத்தம் ஒழுகும். நான் 'தேமே'னென்று உட்கார்ந்திருப்பேன். அந்தச் சனிகள் பேசத் தெரியாவிட்டாலும் அழுதுகொண்டே, கையை நீட்டிச் சாடை காட்டி, தான் விழுந்ததுக்கு நான்தான் காரணம் என்று எப்படியோ சொல்லிக் காட்டிக் கொடுத்து விடும்கள்!

"கடன்காரா! செய்யறதையும் செய்துட்டுப் பூனை மாதிரி உக்காந்திருக்கயா?" என்று அம்மா வந்து முதுகில் அறைவாள். அறைந்துவிட்டுக் "கையெல்லாம் எரியறது...எருமை மாடே!" என்று நொந்து கொண்டு விரட்டுவாள்.

"ஏண்டி அவனை அடிக்கறே! பாவம், அவன் 'தேமே'ன்னுதானே இருக்கான்" என்று யாராவது அடுத்த வீட்டு—எதிர் வீட்டு மாமி வந்து—அவள் வந்த பிறகு அழ ஆரம்பித்த என்னைச் சமாதானப் படுத்தி அழைத்துக்கொண்டு போவார்கள். பட்சணம் கிடைத்த பிறகு நான் சமாதானம் அடைவேன். ஆனாலும் அங்கேயும் 'தேமே'னென்று இருந்துகொண்டே ஏதாவது செய்து விடுவேன். எப்படியோ பழியிலிருந்து மட்டும் தப்பித்துக் கொள்வேன்...காப்பிப் பொடி அரைக்கிற மிஷின்லே மண்ணைக் கொட்டி அரைக்கறது... திடீர்னு, "மாமி...இங்கே வந்து பாருங்கோ. யாரோ மிஷின்லே மண்ணைப் போட்டு அரைச்சிருக்கா"ன்னு கத்துவேன்.

"வேற யாரு? எங்காத்துக் கடன்காரனுத்தான் இருக்கும்" என்று அவர்கள் வீட்டுக் 'கடன்கார'னைத் தேடிப் பிடித்து நாலறை வாங்கி வைத்துப் பார்த்தால்தான் ஒரு சந்தோஷம்; ஒரு நிம்மதி.

என் அம்மா மட்டும் என் மேல் அனுதாபம் காட்டுகிற மாமிகளை எச்சரித்துக்கொண்டே இருப்பாள்: "அவனை நம்பாதீங்கோ... பார்த்தா 'மொசு மொசு'ன்னு பூனை மாதிரி இருந்துண்டு உடம்பெ வெஷம்...என்னமோ சொல்லுவாளே, பூனை செய்யறதெல்லாம் வெஷமம்...அடிச்சா பாவம்னு—அந்த மாதிரி..."

அதைக் கேட்டு "ஏண்டா, அப்படியா?" என்று அந்த மாமி என்னைப் பார்ப்பாள். நான் 'தேமே'னென்று அவளைப் பார்ப்பேன்...

"சீ, போடி! என்னத்துக்குக் கொழந்தையெ இப்படிக் கரிச்சுக் கொட்டறே! நீ வாடா..." என்கிற அந்த அணைப்பும் அன்பும் எவ்வளவு இதமாக, சுகமாக இருக்கும்! ஆனால் அந்த அனுதாபம் காட்டுகிற அவர்களுக்குக்கூட நான் உண்மையாக, வெள்ளையாக இல்லை என்பது எனக்கல்லவா தெரியும்!

சரி! நான் என்ன சொல்லிக் கொண்டிருக்கிறேன்! அந்த அக்ரஹாரத்துப் பூனையைப் பத்தி சொல்ல வந்து—அக்ரஹாரத்து மனுஷாளைப் பத்தியும் என்னைப் பத்தியும்னா சொல்லிண்டு இருக்கேன்!—இருபத்தைந்து வருஷத்துக்கு முன்னே பத்து வயசு வரைக்கும் வாழ்ந்திருந்த ஒரு கிராமத்தையும் ஒரு அக்ரஹாரத்தையும் அதிலே வாழ்ந்த மனுஷாளையும் பத்தி இன்னும் எவ்வளவு நாளைக்கி வேணும்னாலும் என்னால் சொல்லிக்கொண்டே இருக்க முடியும். எனக்கு அலுக்காது, சலிக்காது. பார்க்கப் போனா, நான் சொல்லிக் கொண்டு, பேசிக்கொண்டு, எழுதிக் கொண்டு இருக்கிற எல்லாமே ஒரு ஊரை, ஒரு தெருவைச் சேர்ந்தவாளைப் பத்திதானே! மீனு, ருக்கு பட்டு, லலிதா, கௌரிப் பாட்டி, ஆனந்த சர்மா, வைத்தா, ராகவய்யர், கணபதி ஐயர், சங்கர சர்மா இவர்கள் எல்லோருக்குமே ஒருத்தரை ஒருத்தருக்குத் தெரியும். இவா அப்ப இருந்தது, இப்ப எப்பிடி இருப்பான்னு நான் இப்பக் கற்பனை பண்றது, இவர்களிலே சில பேர் எக்கச் சக்கமா பட்டணத்தின் 'மெர்க்குரி லைட்' வெளிச்சத்திலே என்னிடம் வந்து சிக்கிக் கொண்டது, காலத்தினுடைய அடிகளினாலே இவர்கள் வளைஞ்சு போனது, உடைஞ்சு போனது, அடிபடாமல் ஒதுங்கி ஓடிப்போனது, அடிபட்டும் 'ஒண்ணுமில்லே'யென்னு உடம்பைத் தொடச்சு விட்டுண்டது, எங்கேயோ பட்ட அடிக்கு, எங்கேயோ போய முட்டிண்டது, சமயத்திலே என்னண்டையே வந்து முட்டிக்கொண்டு குட்டு வாங்கிக் கொண்டது இதைப்பத்தியெல்லாம் எழுதறதிலே எனக்குச் சலிப்பே கிடையாது; அலுப்பே கிடையாது. எனக்கு அவா மேலே அப்படி ஒரு பிரேமை. அவா சம்பந்தப்பட்ட எல்லாமே எனக்கு ரொம்ப ஒஸத்தி!

ஆனால், அவர்களிலே சிலருக்கு இதுவே அலுத்துப் போச்சுப் போலே இருக்கு...ம்ஹும்! பயமா இருக்குப் போலே இருக்கு.. என்னமோ சங்கடப் பட்டுக்கறா, 'என்ன ஸார், அக்ரஹாரத்து மனுஷாளைப் பத்தியே எழுதிண்டு'ன்னு.

நான் என்ன பண்ணுவேன்? எனக்குத் தெரிஞ்சதைத்தானே எழுதுவேன். சரி இந்தத் தடவை ஒரு மாற்றத்துக்கு அந்த அக்ரஹாரத்து மனுஷாளை விட்டுட்டு எனக்குத் தெரிஞ்ச ஒரு பூனையைப் பற்றி எழுதப்போறேன். பூனைகளுக்கு நிச்சயமாய் அலுப்போ சலிப்போ பயமோ சங்கடமோ வராது. பூனைகள் கதை படிக்கிறதோ, கதை திருடறதோ இல்லே. பூனைகளைப் பார்த்தா நம் கண்ணுக்குத் தான் 'ஆஷாடபூதி' மாதிரி இருக்குமே தவிர பாவம், அதுகளுக்கு அந்த மாதிரி குணமெல்லாம் நிச்சயம் கிடையாது.

எனக்குப் பூனைகளைக் கண்டால் கொஞ்சம் கூடப் பிடிக்கிறது இல்லை. ஒரு அவெர்ஷன்! சாதாரணமா எனக்கு எந்தச் செல்லப் பிராணிகளையும் பிடிக்காது. அருவருப்பா இருக்கும் சிங்கம், புலி இதெல்லாம் ரொம்பப் பிடிக்கும்! அதெயெல்லாம் பார்த்ததில்லை யல்லவா? அதனாலே பிடிக்கும். பார்த்துப் பழகிட்டா, எதுவுமே பிடிக்காமல் போறது மனுஷ இயல்புதானே? அதுவும் பூனை, நாய், பெருச்சாளி இதையெல்லாம் யாருக்குத்தான் பிடிக்கும்? யாருக்குமே பெருச்சாளி பிடிக்காது'—அப்போவெல்லாம் எனக்கு பொழுது போக்கே கொலை பண்றதுதான்.

'தேமே'ன்னு உக்காந்துண்டு ஒரு கட்டெறும்பைப் பிடிச்சு ரெண்டு காலைக் கிள்ளிட்டு அது ஆடற நடனத்தை ரசிக்கிறது. ஒரு குச்சியாலே அதன் நடு முதுகிலே அழுத்திக் குத்தி, அதெ ரெண்டாக்கி, அந்த ரெண்டு துண்டும் எப்படித் துடிக்கிறதுன்னு ஆராயறது; பல்லியை அடிச்சு, வால் துடிக்கிறதெப் பாக்கறது. தும்பியெப் பிடிச்சு, வாலிலே நூல் கட்டி, சங்கீதம் பாட வைக்கிறது மரவட்டை, வளையல் பூச்சி, ஓணான் இதுக்கெல்லாம் அந்தக் காலத்திலே நான் ஒரு யமகிங்கரன்! எங்க தெருவிலே நுழையற எந்த நாயும் என்னைப் பார்த்துட்டா அதுக்கப்புறம் தைரியமா முன்னேறி வராது அப்படியே வாபஸ்தான்!

ஜெயா மாமி வீட்டுத் திண்ணையிலே நான் பாட்டுக்குத் 'தேமே'ன்னு உக்காந்திண்டிருக்கேன் பக்கத்துலே ஒரு குவியல் கருங்கல். நானே செலக்ட் பண்ணிப் பொறுக்கி சேர்த்து வச்சது அதோ' தூரத்திலே ஒரு நாய் வரது இதுக்கு முன்னேயே ஒரு தடவை அதை மூணு காலிலே ஓடவச்சிருக்கேன் உடனே நான் தூணிலே மறையறேன். அடிக்கிறவனுக்கே இவ்வளவு உஷார் உணர்ச்சி இருந்தா, அடிபடுகிற அதுக்கு இருக்காதா? இரண்டு காதையும் குத்திட்டு நிமிர்த்திண்டு சட்டுனு என்னைப் பார்த்துடுத்து! 'டேய' அடிப்பியா? நான் பாட்டுக்குப் போயிடறேண்டா' என்பது போல் ஒரு பார்வை நான உடனே அதைப் பாக்காத மாதிரி முகத்தைத் திருப்பிண்டுடறேன். அதுக்குக் கொஞ்சம் தைரியம் அந்த எதிர் வீட்டு வரிசை ஓரமா இரண்டு பின்னங்காலுக்கும் நடுவிலே வாலை இடுக்கிண்டு என் மேலே வச்ச கண்ணை எடுக்காமலேயே நகர்ந்து வரது என் கையெல்லாம் பரபரக்கறது பல்லைக் கடிச்சுண்டு என்னை அடக்கிக்கிறேன் இதோ அது எனக்கு நேரே வந்துட்டது...சீ! அந்த வேகமெல்லாம் இப்ப வராது. நான் என்ன பண்ணினேன்னு யாருக்கும் தெரியாது. தெருவையே

கூட்டற மாதிரி கத்திண்டு என்ன ஓட்டம் ஓடறது அது ! தலையிலே குறி வச்சாத்தான் காலிலே படும். பட்டுடுத்து ! நான் 'தேமே'ன்னு உக்கார்ந்திருக்கேன்.

சத்தம் கேட்டு ஜெயா, மாமி உள்ளேருந்து வரா. 'சடக்'னு திண்ணையிலிருந்து கல்லையெல்லாம் கீழே தள்ளிடறேன்.

"ஏண்டா, நாயை யாரு அடிச்சது?"

"ஐயையோ, நான் இல்லே மாமி."

"சரி, யாரையாவது கூப்பிடு. வெந்நீர் உள்ளே ஒரு பெருச்சாளி வெளியே போக முடியாம நிக்கறது. யாரையாவது கூப்பிடுடா அம்பி."

அவ்வளவுதான் ஒரு விறகுக் கட்டையைத் தூக்கிண்டு நான் போறேன். மாமி கத்தறா. "வேண்டாண்டா, வேற யாரையாவது கூப்பிடு. அது உன் மேலே பாஞ்சுடும்."

வெந்நீர் உள் மூலையிலே அதைக் 'கார்னர்' பண்ணிட்டேன் நான். பெருச்சாளி தலையைத் தூக்கி என்னைப் பாத்து சீறிண்டு நிக்கறது. தலையைக் குறிபார்த்து 'நச்'னு ஒரு அடி. சனியன்! தன்னையே பிரதட்சிணம் பண்ணிக்கற மாதிரி சுத்திச் சுத்தி வெந்நீருள் பூரா ரத்தம் கக்கிச் செத்துடுத்து. ஜெயா மாமி பயந்துட்டாள். நானும் பயந்த மாதிரி "மாமி மாமி"ன்னு கத்தினேன். ஜெயா மாமி ஓடிவந்து என்னைக் கட்டிப் பிடிச்சிண்டா. "நோக்கு இந்த வேலை வேண்டாம்னு சொன்னேனோன்னோ... கருமத்தைப் பார்க்காதே... வா. ராக்காயி வந்தால், கழுவிவிடச் சொல்லலாம்."

பயந்து நின்னுண்டிருக்கிற என்னை ஆதரவா ஜெயா மாமி அணைச்சுக்கிறாள். பெரியவா அணைச்சுண்டா என்ன சுகமா இருக்கு!

அந்தப் பெருச்சாளி என்னைப் பார்த்துச் சீறலைன்னா எனக்கு அவ்வளவு கோபம் வந்திருக்காது. அது மட்டும் என்னைப் பார்த்துச் சீறிட்டுத் தப்பிச்சும் போயிருந்தால் நான் அழுதிருப்பேன்.

கொலை செய்யறதைத் தவிர இன்னொரு பொழுது போக்கும் எனக்கு உண்டு. அது என்னன்னா, கொலை பண்றதையும், கூறு போட்டு விக்கறதையும் வேடிக்கை பார்க்கறது. அந்த அக்ரஹாரத்துக் கடைசிலே ஒரு திடல் உண்டு. அந்தத் திடல்லே இருக்கிறவாளெல்லாம் என்னமோ ஒரு பாஷை பேசுவா. ஆடு, மாடு, கோழி எல்லாம் வச்சிருப்பா. அங்கே ஒரு கடா மீசைக்காரன் இருப்பான். வெங்கிட்டு, சுந்தரம், உத்தண்டம் இவங்களுக்கெல்லாம் அவனைக் கண்டாலே 'டபிள்ஸ்'தான். எனக்கு அவனைக்

கண்டா பயமே கிடையாது. அவன் எப்போடா நம்ம தெரு வழியா வருவான்னு காத்துண்டே இருப்பேன். அவன் சாயங்காலம் நாலு மணிக்கு எங்க தெரு வழியா அந்தத் திடலுக்கு திரும்பிப் போவான். நான் அவனையே பாத்துண்டிருப்பேன். அவன் மீசை எனக்கு ரொம்பப் பிடிக்கும். ஒரு துருப்பிடிச்ச கறுப்பு சைக்கிளிலே அவன் வருவான். அந்த சைக்கிளிலே அவனைப் பார்த்தா ஆடு மேலே ஒரு ஆள் உக்காந்து சவாரி பண்றாப்பலே இருக்கும். சைக்கிள் ஹாண்ட் பார்லே ஒரு காக்கி பை இருக்கும். அதுலெ ரத்தக்கறையா இருக்கும்; ஈ மொய்க்கும்; அது உள்ளே இருக்கற கத்தியோட பிடி மட்டும் தெரியும். நான் பெரியவனானப்புறம் அவனை மாதிரியே மீசை வச்சுண்டுடுவேன். இன்னும் பெரிய கத்தியா வெச்சுக்குவேன். யாரானும் சண்டைக்கு வந்தால், வெட்டிடுவேன். பெரியவனானால் நிச்சயமா மனுஷாளையும் வெட்டுவேன். என்னைக் கண்டு எல்லோரும் பயப்படணும். இல்லாட்டா, கத்தியாலெ வெட்டுவேன். —நான் என்ன சொல்லிக் கொண்டிருக்கிறேன்? அக்ரஹாரத்துப் பூனையைப் பத்தியல்லவா சொல்ல வந்தேன்? பரவாயில்லே. பூனையைப் பத்தி சொல்ல இடம் வந்தாச்சு. சொல்லிடறேன்—

எங்க அக்ரஹாரத்திலே ஒரு பூனையும் உண்டு. ரொம்ப 'நொட்டோரியஸ்!' பூனென்னு, ஒரு சின்னப் புலி மாதிரி இருக்கும். உடம்பெல்லாம் வரி வரியா இருக்கும். இந்தச் சனியனுக்கு அக்ரஹாரத்துலே என்ன வச்சிருக்கோ? பூனை மாமிச பட்சிணிதானே! இது மாமிசம் கிடைக்கிற இடத்தையெல்லாம் விட்டுட்டு, இந்த அக்ரஹாரத்துலே இருக்கு. அதனாலே இந்த அக்ரஹாரத்துப் பூனை கம்பல்ஸரியா சைவப் பூனை ஆயிடுத்து. எனக்கும் அதுக்கும் ஓர் ஒத்துமை உண்டு. நானும் 'தேமே'ன்னு இருப்பேன். அதுவும் 'தேமே'ன்னு இருக்கும். நானும் விஷமம் பண்ணுவேன். அதுவும் விஷமம் பண்ணும். நானும் எல்லாராத்துலேயும் போய் விஷமம் பண்ணுவேன். அதுவும் எல்லார் ஆத்துலேயும் போய் விஷமம் பண்ணும்.

ஒருநாள் ஜெயா மாமி 'ஓ'ன்னு அலறிண்டு சபிச்சா: "இந்தக் கட்டேல போற பூனை ஒரு படி பாலையும் சாச்சுக் கொட்டிடுத்தே...! அந்தப் பெருச்சாளியை அடிச்ச மாதிரி இதை யாராவது அடிச்சுக் கொன்னுக் கூடத் தேவலே."

ஊஞ்சல்லே படுத்துண்டு விசிறிண்டிருந்த மாமா சொன்னார்: "வாயெ அலம்புடி...பாவம்! பாவம்! பூனையைக் கொல்றதுன்னு

புதிதா என்ன? ஆனாலும் இப்போதெல்லாம் ஓடுவது சிரமமாக இருக்கிறதே, இந்த அனுபவந்தான் அதற்குப் புதிதாக இருந்தது.

சுத்தமான திண்ணைகளிலும் காம்பவுண்டுகளிலும் இந்த அசுத்தம் பிடித்த நாய்க்கு இடம் தர மறுத்து விரட்டிய பின், கடைசியில் ஒரு நாள் இரவில் மிகுந்த வேதனையோடும் விரக்தியோடும் அசுத்தம் பிடித்த ஒரு சேரிக்குள் நுழைந்தது நிக்கி.

அது பிறந்ததே, அந்த மாதிரி இன்னொரு குப்பம். ஈரம், சகதி. ஒரு குடிசையின் பின்னால் உள்ள மூலையில் சுகமான புழுதி மண்ணில் ஐந்து அழகிய நாய்க்குட்டிகளைப் பிரசவித்தது நிக்கி.

எல்லாரும் வந்து அந்தக் குட்டிகளின் அழகைப் புகழ்ந்தார்கள். ஏதோ ஜாதிநாயின் கலப்பு என்று பெருமையாகப் பேசிக் கொண்டார்கள். சில நாட்களில் அவை அனைத்தும் நிக்கியிடமிருந்து பறிபோயின.

வாழ்வும் தாழ்வும், பெருமையும் வீழ்ச்சியும், மகிழ்ச்சியும் துயரமும் நாயின் வாழ்க்கையிலும் மாறி மாறித்தான் வரும் போலும்!

காரில் போகிற, சங்கிலியால் பிணித்துக் கையில் இழுத்துக் கொண்டு போகிற ஜாதிநாய்களைப் பார்த்து இப்போது நிக்கி ஓடுகிறது. ஒருவேளை தனது குட்டியை அது தேடுகிறதோ? நிக்கி பெற்றதாகவே இருந்தாலும் அவை நிக்கியின் ஜாதியாகிவிடுமா, என்ன?

அதோ, பங்களா நாயையோ அல்லது இன்னுமொரு குப்பத்து நாயையோ தேடித் தெருநாயாக நிக்கி அலைந்து கொண்டிருக்கிறது. அதற்கு இப்போது ஒரு நாயின் தேவையை நாடுகிற ஸீஸன், தேவை என்று வந்துவிட்டால் ஜாதியையா பார்க்கத் தோன்றும்?

Printed at Taj Press, A-35/4 Mayapuri I, New Delhi 110064